பலிக்காமற் போகலாமென்பதை மட்டும் இவர்கள் முன்யோஜனையோடு தீரத்தெளிய நினைந்து ஆலோசிக்கவில்லை.

"உடல்சிறியாரேன் றிருக்கவேண்டாம்."

"மடல்பெரிது தாழை, மகிழினது கந்தம்
உடல் சிறியார் என்றிருக்கவேண்டாம்"—

என்னும் மூதுரையின் உண்மையை இவர்கள் உள்ளபடி யுணர்ந்தார்களில்லை. இவர்கள் கணக்கிலும், உருவத்திலும், யந்திர தந்திர நிர்மாண யுக்தியிலும் தேர்ந்தவர்களாயிருந்தபடியால் நமக்கு மிஞ்சினவர்கள் யாருமில்லை யென்கிற அகம்பாவச் செறுக்கில் பெல்ஜியம் தேசத்தாரையும் அவர்களுடைய மனோதீரத்தையும் கணக்கிலெடுத்துக் கொள்ளாமல், அடாபிடித்தனத்தால் அவர்களை வென்று விடலாமென்று நினைத்துவிட்டார்கள். இந்த எண்ணம்தான் தப்பாகப் போய்விட்டது.

"சிற்றுளியால் கல்லும் தகரும்."

பெல்ஜியம் தேசத்தார் "உடல் சிறியார்" என்கிறபடி சிறு நாட்டில் வசிப்பவர்களாயினும் புத்தி யுக்தி தீரத்தில் இவர்களைவிட எத்தனையோ மடங்கு மேலானவர்களாகக் காட்டிவிட்டார்கள். அவர்கள் 15 நாளைக்கு இவர்களை எல்லைப் புறத்தில் மறியல் போட்டு மடக்கிவிட்டதால், ப்ரான்ஸூக்காரர்கள் தங்கள் சைனியங்களை முஸ்தீப்பு செய்துகொண்டு யுத்த ஸந்நத்தர்களாக அவகாசம் கிடைத்துவிட்டது. இங்கிலாந்துக்கும் ருஷியாவுக்கும் இது பரமசாதகமாக விருந்தது. ஜெர்மானியர்கள் பெல்ஜியம் நாட்டைத் தாண்டி வருமுன் அவர்கள் வலி குறைந்துவிட்டது. எதிரிகள் படைவலி பலத்துவிட்டது. ஆகவே பாரிஸ் நகரண்டை மட்டும் வந்துவிட்டுத் திரும்பிப் பின்வாங்க வேண்டி நேரிட்டுவிட்டது. 'கொல்லுலைக் கூடத்து'ப் பெரியசம்மட்டியினால் தகர்க்கப்பட முடியாத கன்மலை "சிற்றுளியால்" தகர்க்கப்பெறும் என்பதை யுணர்ந்தார்களில்லை.

"மத-மோஹம்."

இப்பொழுது அவர்கள் ஏற்பாடெல்லாம் உருப்படா தொழிந்ததற்கு காரணம் இது தான்.

"......................——சிற்றுளியால்
கல்லும்தகரும், தகராகனங்குழாய்
கொல்லுலைக் கூடத்தினால்"

என்றதன் உண்மையை உணராமல் அவர்கள் பட்டபாடு, அப்பப்பா! சொல்லிமுடியாது. இரவில் தீவட்டிக் கொள்ளையடிக்கத் தயார் செய்தவன் பகல் வெளிச்சத்தைக் கண்டு தன் ஏற்பாடு பயன்படா தொழிந்ததுபோலும், பகற்கொள்ளைக்கு ஏற்பாடு செய்தவன் சைனியங்களை யெதிர்த்துச் சண்டை செய்ய ஏலாதது போலவும், திடீரென்று அசப்பில் எதிரிகளை முறியடித்து அவர்கள் நாடு நகரங்களைப் பிடித்துக்கொண்டு விடலாமென்று ஏற்பாடு செய்தவர்கள் பெல்ஜியம் நாட்டார் காட்டிய வீர தீரத்தால் விழித்துக்கொண்டு சண்டைக்குத் தயாராக வரப் புறப்பட்டபின் முன்செய்த ஏற்பாடுகள் தலை கவிழ்ந்து போவனவாயின. அவர்கள் நினைத்தது ஒன்றாக நேர்ந்தது ஒன்றாயிற்று. அசுர பலமுள்ளவர்கள் அழிவதெல்லாம் இப்படித்தான். பத்மாஸூரன் தன்கையால் தானே தஹிக்கப்பெற்று நாசமானான். ஏனெனில் மோஹத்தில் மதிமயங்கி தன் தலையில் தானே கை வைத்துக்கொண்டான். அவன் பிறரை யழிக்கப் பெற்றவரம் அவனையே அழிப்பதாயிற்று. ஆகையால் தான் தேஹபலத்திலும் மனோபலம் பெரிதென்றும், மனோபலத்திலும் ஆத்மபுத்தி பலம் பெரிதென்றும் பெரியோர் சொல்லியிருக்கிறார்கள். முன்னதற்குதாரணம் எத்தனையோ பஞ்சதந்திரக் கதையில் காணலாம். பின்னதற்குதாரணம் தேவாசுரர்கள் சண்டையில் அசுரர்கள் அழிந்ததெல்லாம் மதிமோசத்தாலென்று நன்றாக விளங்கும். ஆகையால் "தர்மமே ஜயம்" என்பதில் நம்பிக்கையும், தர்மத்தை யுள்ளபடி யுணர்ந்து நடக்கும் சிந்தையும்

ஒழுக்கமும் வேண்டும். இவ்விரண்டு மில்லாத விடத்து வெறும் தேஹபலம் வீண்முரட்டுபலமாய் முடிந்து மிருகபலத்துக்கொப்பாகும். அசுரபலமும் அப்படியேதான் கடைசியில் முடியும். இதையுணர உணர்த்தவே இந்தப் பார்ஹத மஹாயுத்தம் நேர்ந்தாப்போலு மிருக்கிறது.

"அஹம்பாவத்தால் வந்த ஆபத்து."

பெல்ஜியத்தைப் படைவலியால் ஜயித்தும் அத்தேசத்துக் குடிகள் தம் மனோவலியால் இவர்களை எதிர்த்து நிற்பதால், இவர்கள் படைவலி பிரயோஜனப்படாமற் போயிற்று. பிரதமத்தில் ஊரைக் கொள்ளையிட்டும் 'யுத்தநஷ்டம்' என்று பெருநிதி வசூல் செய்தும் காரியத்தைச் சாதித்து வந்தார்கள். இதை யுணர்ந்த குடிகள் தம் தானியக்களஞ்சியங்களை யழித்துவிட்டு ஊரைவிட்டோடத் தலைப்பட்டு விட்டார்கள். பெல்ஜியம் நாட்டிலுள்ள சைனியங்களுக்கு ஆகாரம் முட்டுப்பட்டு அது இல்லாமல் தவிக்கிறார்கள். மனிதன் வயிற்றால் பிழைத்திருப்பவன். அதுவும் இராணுவத்துக்கு பலம் வயிற்றுச் சோற்றில் தானிருக்கிறது. சேனைகள் வாய்க்குப்போடச் சாப்பாடில்லை. பீரங்கி வாய்க்குப்போட மருந்தில்லை. சேனைகள் இந்த ஸ்திதியில் அந்நிய தேசத்திலிருந்து சண்டை போடுவதென்றால், அது எப்படி ஸாத்தியமாகும்? ஜெர்மானியர் இந்த வித்தையும் கற்றார்போல ஆரம்பசூரத்துவமாய் நடந்துகொண்டுவிட்டார்கள். முட்டுப்பட்டபோது விழிக்கிறார்கள். கைப்பொருளெல்லாம் செலவாய்விட்டது. சண்டைச் செலவுக்கு இனிக் கடன் வாங்கியாகவேண்டும். இந்த அவஸ்தையில் அவர்கள் இப்பொழுது இருக்கிறார்கள். இதிலிருந்து எப்படி தப்புவார்களோ தெரியவேண்டும்.

## A HOUSE-HOLD NARRATIVE OF THE CONTENDING PARTIES IN THE GREAT WAR OF 1914.

### The Slav vs Teuton: A Brief Historical Review.

"Europe and America have gasped with admiration before the symmetry and system of German organisation. Only those who placed liberty of thought, a generous admosphere and a love of abstract truth before mechanical perfection have wondered—and are still wondering—if Germany may not have to be freed from Teutonism before she can resume her place in the world as a leader of thought. However that may be this military Teutonising element is essentially antipathetic to the Slav-dreamer and democrat. He can fight for an ideal; he will die for a dream. He will not submit to being thrust wholesale into a sausage machine, to come out the other end neatly measured, labelled, and looking like every other sausage. The Slav and the Teuton are hereditary foes, on racial grounds, but that racial animosity is founded on a real difference of ideals, on a mutual incompatibility. German and Slav might settle down side by side—they have mingled much and have much in common, but the Teuton comes with his brutal drill-sergeant methods and the inmost soul of the Slav revolts. In writing this it must be remembered that Slav unity has never yet been complete. The Slavs have never trusted each other, and their distrust has been justified. Their opportunity for cohesion has come. Will they grasp it?"—*Mr. Ellis M. Cook in the Royal and Colonial Institute Journal.*

## A HOUSE-HOLD NARRATIVE OF THE CONTENDING PARTIES IN THE GREAT WAR OF 1914.

### The Slav vs Teuton: A Brief Historical Review.

### 1914ஷுத்துப் பார'த மஹாயுத்தம்: சண்டைக்காரர்களின் பூர்வோத்தரம்.

இப்பொழுது ஐரோப்பாவில் நடக்கும் சண்டையில் இருஜாதியார் சம்பந்தப் பட்டிருக்கிறதாகச் சொல்கிறார்கள். அவர்களுக்கு ஸ்லாவ் ஜாதியாரென்றும் டியூடன் ஜாதியாரென்றும் பேர்வழங்குகிறது. தற்காலம் ஐரோப்பாவிலுள்ள ஜனங்களெல்லாரும் ஆதியில் ஏகமாயிருந்த ஒரு (Indo-European Stock) ஜாதியிலிருந்துவந்ததாகச் சொல்கிறார்கள். இது எப்படியாயினும் சரித்திரமூலமாய் ஆராய்ந்துபார்க்கில் பூர்வம் ப்ரபலமாய் விளங்கிய ரோமராஜ்யம் (Roman Empire) சீர்குலைந் தழிந்ததற்குக்காரணம் 'ஜர்மானிக்' ஜாதியார் பலர் படையெடுத்து வந்தது என்று பள்ளிக்கூடப் பிள்ளைகளுக்கும் தெரியும். கிறிஸ்து சகாப்தமுதலில் சக்ரவர்த்திப் பட்டம்தரித்து ரோம் ராஜ்பங்களையெல்லாம் ஆண்டவரான சார்லிமேன் சக்ரவர்த்தி இந்த ஜர்மானிக் ஜாதியைச் சேர்ந்தவர்தான். ஆனால் அவருடைய ராஜ்பத்துக்கும் ரோமுக்கும் சம்பந்தமில்லை. ஓரினத்தாராகிய பலஜாதியாரும் பலநாட்டுச் சிற்றரசர்களும் ஒன்றுகூடி அவர்களுக்குமேல் சக்ரவர்த்தியாகிய மேல் அதிகாரி சேர்ந்துள்ள இராஜ்யமது.

THE HOLY ROMAN EMPIRE.

"ஹோலி ரோமன் எம்பையர்."

இந்தப் பரதகண்டத்திலே 56-தேசத் தரசர்களிருந்ததாகவும் அவர்களுக்கெல்லாம் மேலாய் சக்ரவர்த்தியொருவர் இருந்ததாகவும் சரித்திரபூர்வகமாய் அறிகிறோம். அப்படிப்போல "ஹோலி ரோமன் எம்பையர்" என்று பூர்வத்தில் பிரக்கியாதிபெற்று சார்லிமேன் சக்ரவர்த்தி காலத்தில் பிரபலம்பெற்று அதற்கு முன்னிருந்த ரோமராஜ்யத்தின் அதிகாரத்தையெல்லாம் வகித்துவந்த ராஜ்யம் பல தேசங்கள்கூடிய ராஜ்பமாயிருநதது. இந்த தேசங்களுக்கெல்லாம் மேலானவர் "சக்ரவர்த்தி." இந்த சக்ரவர்த்திப் பட்டம் ஆஸ்திரியா தேசத்தவராகிய ஹாப்ஸ்பர்க் வம்சத்தார் பாரம்பரியமாக இருந்துவந்தது. 1814-ஷு முடிந்த நெபோலியன் யுத்தங்களின் பயனாக "ஹோலி ரோமன் எம்பையர்" என்கிற பேரால் விளங்கிய பூர்வீகராஜ்பம் சிதைந்து போய்விட்டது.

ப்ரஷ்யா முன்னுக்கு வந்தகாலம்.

நெபோலியன் சண்டையில் ப்ரஷ்யா முன்னுக்கு வரலாயிற்று. "வாடர்லூசண்டை" (Waterloo) 1814-ம் வருஷத்தில் நடந்தது. அஃதோடு நெபோலியன் கொட்டம் அடங்கிவிட்டது. பிறகு 1870-ம் வருஷத்தில் ப்ரஷியாவுக்கும் ப்ரான்ஸுக்கும் சண்டை நடந்தது. அதில் ப்ரெஞ்சு தேசத்தார் தோல்வியடைந்தார்கள். ஸேடான் (Sedan) சண்டையில் அவர்கள் தோல்வி யடைந்தபின் ப்ரஷ்யா தேசமும் அதைச்சேர்ந்த சிற்றரசர்களும் ஒன்றுகூடி ஒரு இனத்தாராக விருந்து இப்பொழுதுள்ள "ஜெர்மன் எம்பையர்" என்னும் மஹா ராஜ்பத்தை ஏற்படுத்தினார்கள். இந்த இராஜ்யம் ஏற்பட்டபோது அது பாரிஸ்நகரில் விளம்பரம் செய்யப்பட்டது. 1871-ம் வருஷம் பிப்ரவரிமீ ஆல்ஸேஸ் லாரேய்ன் மாகாணங்கள் ஜெர்மனி ராஜ்யத்தைச் சேர்ந்ததாக ப்ரஷியாவோடு சேர்த்துக்கொள்ளப்பட்டது.

தற்கால ஜெர்மனி ராஜ்யம்.

இப்படியாக இப்பொழுதுள்ள ஜெர்மன் எம்பையர் வாழ்வெல்லாம் 1870-ம் வருஷத்துக்குப்பின் உண்டானதே. ஆனால் அது முதல் 30 வருஷத்தில் ஜெர்மனி மிகவிர்த்தியடைந்துவிட்டது. 1870-ம் வருஷத்தில் ஜர்மனியைச்சேர்ந்த நாடுகளெல்லாம் ஏழமைப்பட்டிருந்தன. இப்பொழுது கல்வியிலும், செல்வத்திலும் சீரிலும் மிகுந்திருக்கின்றன. 1814-ம் வருஷத்தில் (வாடர்லூ சண்டையி

ஞல் நெபோலியன் கொட்டம் அடங்கிய வருஷம்) ஜெர்மன் எம்பையர் என்பதே இல்லாமலிருந்தது. அந்த நாடுகள் சில்லரை அரசர்களால் ஆளப்பட்டு மிகவும் க்ஷீண தசையிலிருந்தன. அத்தேசங்களின் ஆஸ்தியெல்லாம் 200 கோடிக்குக் குறைந்திருந்தது. இப்பொழுது 1914-ம் வருஷத்தில் ஜெர்மன் ராஜ்யத்தின் ஆஸ்தியிலிருந்துவரும் வருஷாந்தர வருமானம் மட்டும் 200 கோடியிருக்கும். இதைத் தவிர 160 கோடி முதல் சேர்ந்திருக்கிறது.

1814-ம் வருஷத்தில் இப்பொழுது ஜர்மனியிருக்கும் நாடுகளின் மொத்த ஜனத்தொகை 2-கோடியே 40-லக்ஷம். இப்பொழுது ஜெர்மனியின் ஜனத்தொகை 6-கோடியே 70-லக்ஷம். அதாவது 100-க்கு 180 விகிதம் பெருகியிருக்கிறது. இப்படியே வியாபாரம், வர்த்தகம், கல்வி, நாகரிகம் எல்லாவற்றிலும் அவர்கள் மிகவும் முன்னுக்கு வந்திருக்கிறார்கள்.

### THE HOUSE OF HAPSBURG.
### ஹாப்ஸ்பர்க் வம்சம்.

ப்ரஷ்யாவின் தலைமைக்குள்பட்டு ஜெர்மன் நாடுகள்சேர்ந்து 'ஜெர்மன் எம்பையர்' எனப் பேர்பெற்று விளங்கவும், பழமையான "ஹோலி ரோமன் எம்பையர்" என்னும் மஹாராஜ்யத்தின் தலைமைவகித்த ஹாபஸ்பர்க் வம்சத்தார் ஆஸ்திரியா சக்ரவர்த்தியாக விளங்கினர். இப்பொழுது ஆஸ்திரியா, ஹங்கேரி இரண்டு தேசங்களும்சேர்ந்து ஒரு ராஜ்யமாக விளங்குகிறது. அதற்குத்தலைவர் ஹாப்ஸ்பர்க் வம்சத்தவரான ப்ரான்ஸிஸ் ஜோஸெப் சக்ரவர்த்தி. இவருடைய மூத்தகுமாரரும் பட்டத்துக்குரியவருமான 'ஆர்ச்டியூக் ப்ரான்ஸிஸ் பேர்டினெண்ட்' என்பவர்தான் அவருடைய மனைவியோடு ஸிராஜிவோ (Serajevo) பட்டணத்தில் கொலை செய்யப்பெற்றார். அது காரணமாகவே இந்தமஹாயுத்தம் உண்டாயிற்று என்பர்.

### (THE HOUSE OF HOHENZOLLERN.)
### ஹாஹன்ஸால்லர்ன்.

1870-ம் வருஷமுடிவில் தலையெடுத்த ஜெர்மன் எம்பையருக்குத் தலைவர் பரஷ்யா தேசத்தரசர். இவர்தான் ஜர்மன் சக்ரவர்த்தி பட்டத்துக் குரியவர். இவர் ஹாஹன்ஸாலர்ன் (Hohenzollern) வம்சத்தைச் சேர்ந்தவர்.

சார்லிமேன் (Charlemagne) சக்ரவர்த்தியாண்ட "ஹோலி ரோமன் எம்பையர்" என்னும் மஹாராஜ்யம் அவருடைய பேரன் அரசாண்டகாலத்தில் இரண்டுபட்டுச் சீர்குலையலானபோது, 'கால்' (Gaul) என்னும் (இப்பொழுது ப்ரான்ஸ் இருக்கிற) பாகம் ரோமநாகரிகத்துக்குட்பட்டுச் சீரடைந்தவர்களான ஜாதியாரால் குடியேறப்பெற்றிருந்தது. அவர்கள் இரத்தத்தில் (Celts) ஸெல்ட்ஸ் ஜாதியின் ரத்தமும் கலந்திருந்தது. இவர்கள் ஒன்று சேர்ந்து ப்ரான்ஸ் ராஜ்யத்தை யேற்படுத்தினர்கள். இவர்களுக்கு (Gauls) "கால் நாட்டார்" என்கிறபேரும் இருந்தது. பூர்விகமான நாகரிகம் படிந்த இந்த ஜாதியார், "கால்" பிரதேசத்தில் வாழ்ந்து வந்தபொழுது, தென்னிந்தியாவில் பாளையக்காரர்கள் முன்னுக்குவந்து பிரபலமடைந்ததுபோல், ஆதியில் இவர்கள் தேசத்தைக் கொள்ளையடித்துப் பாழ்படுத்திய திருடர் கூட்டத்தலைவர்கள் விசேஷபிரபலம் பெற்றிருந்தார்கள்.

அவர்கள் நாகரிகத்தில் பின்னடைந்தவர்களாய், நாகரிகமாய் 'உழுதுண்டு' ஜீவித்த ஜாதியாரைக் கொள்ளையிட்டு வசித்து வந்தார்கள். இவர்கள் ஜெர்மானிக் ஜாதியைச் சேர்ந்தவர்கள். கொள்ளையடிப்பதே தொழிலாயிருந்தவர்கள். இந்த கொள்ளைக்காரர்கள் கூட்டத்தை கிறிஸ்துபிறக்குமுன் 102-வது வருஷத்தில் (சரியாக 2016 வருஷங்களுக்கு முன்) பேர்போன மேரியஸ் (Marius) என்னும் ரோமன் ஜெனரல் வேரறுத்து அவர்கள் கொட்டத்தை யடக்கினர். அதற்குப்பின் இந்தக் கொள்ளைக்கூட்டத்தார் வம்சத்தில் உதித்தவர்கள் "டியூடன் ஜாதியார்" என்று பேர்பெற்றார்கள் என்று சொல்கிறார்கள். இந்தக் கூட்டக்கொள்ளைத் தலைவர்கள் கிறிஸ்துபிறந்த 13, 14-வது நூற்றாண்டுகளில் கைவலுத்து பொமரேனியா முதல் மிமெல் (Pomerania to Memel, on

the Baltic) வரையிலுள்ள பால்டிக் கடலோரத்து தேசங்களைப்பிடித்து வசப்படுத்திக் கொண்டு வாழ்ந்தார்கள். இந்த நாடுதான் பிந்தி ப்ரஷ்யாவாகத் தலையெடுத்தது. இவர்கள்தான் டியூடன் ஜாதியாரின் மூதாதைகள். 'ஜர்மானிக்' ஜாதியார் என்பது ஆதியில் இருந்த இனத்தைக்குறிக்கும் பேராயிருந்தது. இதில் டட்ச், பிரிடிஷ், ஸ்காண்டிநேவியன் முதலான பலதேசத்தார்களும் சேர்ந்தவர்களாகிறார்கள். இவர்களெல்லாம் ஆதியில் ஒரினத்தாராகவிருந்தவர்களாதலால் (Germanic) ஜர்மானிகர்கள் என்று பேர்பெற்றார்கள். இப்பொழுதுள்ள ஜெர்மனி தேசத்தவர்கள் (முக்கியமாய் ப்ரஷ்பா தேசத்தார்) டியூடன்ஸ் என்றுசொல்லும் பூர்வம் கொள்ளைக் கூட்டத்தலைவர் (Robber Chiefs) களாயிருந்தவர்களுடைய பரம்பரையிலுதித்தவர்கள். இவர்களுக்குத் தலைவராயுள்ளவர்தான் ஹாஹன்ஸால்லர்ன் வம்சத்தார். இவருக்கு Grand Master of the Teutonic Knights என்கிற பட்டமுண்டு.

(CENTRAL EUROPE.)

ஐரோப்பாவின் மத்தியபாகம்.

ஐரோப்பாகண்டத்தின் மத்தியபாகத்திலும் வடபாகத்திலுமுள்ளஜனங்கள்ஆதி ஜெர்மானிகர்கள் மட்டுமென்றாவது அவர்களுக்குப் பின் வந்த டியூடன் ஜாதியைச் சேர்ந்தவர்கள் என்றாவது சொல்லமுடியாது. ஆதி ரோமராஜ்யத்தை ஜெர்மானிகர்கள் கூட்டம் கூட்டமாய் வந்து பிடித்துக்கொள்ள அது சீர்குலைந்ததென்று சொன்னோம். அவர்களைப்பின்தொடர்ந்து இன்னொரு ஜாதியார் படையெடுத்து வந்து குடியேறினார்கள். அவர்கள்தான்

"ஸ்லாவ் ஜாதியார்."

இவர்களுக்கு ஸ்லாவ்ஸ் (Slavs) என்று பேர். இவர்கள் பூர்வோத்தரம் என்ன, இவர்கள் எப்பொழுது ஐரோப்பாவிற் சென்று குடியேறினார்கள் என்று சொல்வது சாத்தியமாகவில்லை. ஆனால் பூர்வந்தொட்டுள்ள 'ஸிதியன்ஸ்' (Ancient Scythians) ஜாதியைச் சேர்ந்தவர்கள் என்கிறார்கள். இது எப்படியிருப்பினும், இவர்கள் அதிபூர்வகாலந் தொட்டு ஐரோப்பா கண்டத்தின் மேற்பாகத்தைக் கைப்பற்றிக் கொண்டு அங்கே குடியேறி வசித்து வந்தார்களென்பது நிச்சயம். (Balkan Mountains) பால்கன் மலைத் தொடரையடுத்த பால்கன் தீபகல்பத்திலும் (Balkan Pennisula), க்ரீஸ் (Greece) தேசத்திலும் கூட இவர்கள் குடியேறியிருந்தார்கள் என்பது ஸ்பஷ்டமாகத் தெரிகிறது.

"ஸார்மேஷியா" ("Sarmatia")

பூர்வத்தில் ரோமராஜ்யமிருந்த காலத்தில் (கிறிஸ்து பிறக்குமுன்) "ஸார்மேஷியா" என்னும் தேசமொன்றிருந்தது. அது தான் இப்பொழுதுள்ள படங்களில் (Russian Poland) ருஷியன் போலண்ட் என்றும், காலிஷியா (Galicia) என்றும் பேர்கள் பெற்றிருக்கிறது. (இந்த இடங்களைப் பிள்ளைகள் "அட்லாஸ்" என்னும் படப்புஸ்தகங்களை வைத்துக் கொண்டு பெற்றோர் பெரியோர்கள் உதவி வேண்டியிருப்பினும் அதை நாடியடைந்து நன்றாகப் பார்த்துத் தெரிந்துகொள்ளல்வேண்டும்.)

ஸ்லாவ் ஜாதியரின் பூர்வீக ஸ்தானம்.

ஆதியில் இந்த ஸார்மேஷியாவில் (Modern Galicia and Russian Poland) இருந்தவர்கள்தான் ஸ்லாவ்ஸ் என்பார். இவர்களுடைய பூர்வோத்தரம் இவ்வளவுதான்தெரியும்; இதற்கு மேல் தெரியாது. இங்கேயிருந்து இவர்கள் (ஸார்மேஷியாவிலிருந்தவர்களாதலால் ஸர்ப்ஸ் "Serbs" என்று பேர்வழங்கப் பெற்று) தங்கள் படைவலியாலும், சண்டை செய்யாமல் குடியேறிப் பரவும் சக்தியாலும் ஐரோப்பாவில் புகுந்து அட்ரியாடிக் (Adriatic) கடற்கரைவரையில் பரவிவிட்டார்கள்.

"ஸர்ப்ஸ்' (Serbs)

பூர்வம் கூட்டக்கொள்ளைத் தலைவர்களாயிருந்து பிரபலம்பெற்றபின் "டியூடானிக் நைட்ஸ்" "டியூடன் ஜாதி யுத்தவீரர்கள்" என்று பெத்தப்பேர் வைத்துக்கொண்டு நாடு

நகரங்களைப் பிடித்துக்கட்டிக்கொண்ண்டவர்களான டியூடன்ஸ் பிந்தி ஜயித்த நாடுகளில் பூர்வம் இந்த "ஸர்ப்ஸ்" (Serbs) என்கிற ஸ்லாவ் ஜாதியார் குடியேறியிருந்தார்களென்று நன்ருகத் தெரியவருகிறது. அவர்களுடைய ஸ்தானபலம் போஹிமியா (Bohemia) தேசத்தில் விசேஷித்திருந்தது. இன்றைக்கும் அங்கே அவர்கள் செல்வாக்கேதான் விசேஷம். அரசுரிமையிழந்தாலும் அவர்களுடைய ஜாதிக்குணம் மாறவில்லை. "சுட்டாலும் சங்கு தன் நிறம் மாருது" அல்லவோ! அதுபோல அவர்கள் அரசுரிமையைப் பிடிங்கிக் கொண்டாலும், அவர்கள் பிறவிக் குணத்தை மாற்றமுடியவில்லை.

அவர்கள் பூர்வோத்தரம்.

"கோத்திரமறிந்து பெண்ணைக் கொடு,
பாத்திரமறிந்து பிச்சையிடு."

என்பது நமக்குள் வழங்கும் ஒரு உண்மையான பழமொழி. பழமொழியென்ருல் பரம்பரையாக வழங்கிவரும் மூதுரை, அதாவது, மூத்தோர் சொல் என்று அர்த்தம். கோத்திரம் என்ருல் பூர்வோத்தர பரம்பரையென்று அர்த்தம். பூர்வோத்தர பரம்பரை உத்தமமாக வில்லாத ஒருவனுக்குப் பெண்ணைக் கொடுத்துவிட்டால், சந்ததியின் குணம் மாறிப்போம். விவாகமென்பது குலவிருத்திக்கு மட்டு மல்ல; குணவிருத்திக்கும் அதுவே சாதனமாகும். குலம் கெட்டால் குணம் கெடும். குணம் கெட்டால் ஜாதிகெடும். இது காரணம் பற்றியே அர்ச்சுனன் சண்டைமுகத்தில் யுத்தம் செய்யப் பின்னடைந்தான். குலத்துக்கு கோத்திரம் எப்படியோ அப்படிப் போல ஜாதிக்குப் பூர்வோத்தரம் விசேஷம். ஆதலால் இப்பொழுது நடக்கும் பார்-ஹதயுத்தத்தில் முக்கிய வைரிகளாயிருப்பார்களுடைய ஜாதியின் பூர்வோத்தரத்தைப்பற்றிச் சரித்திர வாயிலாய் ஆராய்ந்தறிந்த மட்டும் உள்ளதை யுள்ளபடி அதிசுருக்கமாய்ச் சொல்லி விளங்க வைத்தோம்.

"உழுதுண்டு வாழ்வார்."

பூர்வந்தொட்டு "ஸலாவ்ஸ்" சாந்தஸ்வபாவமுள்ளவர்கள். அடக்கமும் பொறுமையும் அதற்கேற்ற ஊக்கமும் உழைப்பும் அதிகம். ஓரிடத்தில் நிலையாயிருந்து "உழுதுண்டு வாழ்வார்" நிலையே பெரிதென்று சண்டைசச்சரவுகளில் தலையிட்டுக்கொள்வதைவிட வியவசாயத்தை விர்த்திசெய்து ஜீவிக்கும் ஸ்வபாவம் அவர்களிடத்து பிறவிக்குணமாக ஏற்பட்டிருந்தது. பூர்வத்தில் ஐரோப்பாவில் படையெடுத்துப் போர்விளைத்து ஓரிடத்தும் நிலைத்துத்தரிக்காமல் போர்த்தொழில் செய்து பிழைத்துவந்தவர்களான (Nomadic tribes) அல்லாடிச் சாதியார்களான ஹூணர்கள் (Huns), ஆவர்ஸ் (Avars) இனத்தையொட்டிப் பிழைக்கும் ஜர்மானிக் ஜாதியார்கள், (Germanic hordes) இவர்களெல்லாரினும் "ஸ்லாவ்ஸ்" பயிர்த்தொழில் ஜீவனம் செய்து பிழைப்பதில் விசேஷ பற்றுள்ளவர்களாய் அதற்கேற்ற மேலான குணமும் மணமும் பொருந்தியிருந்தார்கள்.

"இல்வாழ்வார்" (Homeloving people).

இங்கே ஜனஸமூக சம்பந்தமான இன்னொரு விசேஷம் கவனிக்கவேண்டும். நாடோடியாகத் திரிந்து அல்லாடிப் பிழைப்பவர்கள் சண்டை சச்சரவுகளில் கைதேர்ந்தவர்களாய் துணிச்சல் மிகுந்தவர்களாயிருப்பது சகஜம். ஏனெனில் இந்த குணவிசேஷங்கள் அவர்களிடத்தில் இல்லாவிட்டால் அவர்கள் வம்சவிர்த்தியின்றி சீக்கிரம் சிதறுண்டு அழிந்து போவார்கள். அப்படியே ஓரிடத்தில் நிலைத்துக் குடியேறி வீடுவாசல்களோடு வியவசாயம் கைத்தொழில் செய்து பிழைக்கிறவர்கள், சமுதாயக்கட்டுப்பாடும் ஸம்பிரதாய வலுவுமுடையவர்களாயிருப்பது சகஜம். ஏனெனில், "எத்தால் வாழலாம்? ஒத்தால் வாழலாம்" என்பதின் உண்மையை அவர்கள் நித்தியப்படி அனுபவமாயறிந் துணர்ந்தவர்கள். ஸமுதாயக்கட்டுப்பாடுள்ள விடத்தில் ஜாதிபொற்

றுமை தானே விளங்கும். இவ்விரண்டுக்கும் ஆதிமூலமாயிருப்பது "இல்வாழ்வு" என்று சொல்லும் குடும்பம். இதையே "Home" என்றும் "Family" என்றும் சொல்லுவர்.

"குடித்தனமோ துரைத்தனமோ"
(The Principles of Democracy.)

"குடித்தனமோ துரைத்தனமோ" என்றொரு பழமொழி வழங்கி வருகிறதல்லவா. "இல்வாழ்வு" சம்பந்தமான "குடித்தன"ப் பாங்கும் "துரைத்தனம்" என்று சொல்லும் "அரசியல்" முறையும் ஒரே தர்மத்தை யனுசரித்துள்ளன. இவ்விரண்டுக்கும் ஸமஷ்டி, வியஷ்டி பேதமன்றி வேறு பேதமில்லை.

ஸமஷ்டி தர்மம் (Social Evolution)

"ஒன்றிமரம் தோப்பாமா?" என்பது போல, "ஓரிக் குடித்தனம்" அல்லது ஒன்று படாத பலவேறுபட்ட குடித்தனங்கள் துரைத்தனமாகாது. ஆகையால் குடித்தனங்கள் பல விருந்தால் அவைகளையெல்லாம் ஒன்றுபடுத்தி ஓரினப்படுத்தும் "ஸமுதாயக் கட்டுப்பாடு" கூடவேயிருக்கும். இஃதிருந்தால் தான் அது "ஊர்" ஆகும். ஜனங்கள் ஒன்று கூடி பிரவிருத்தி மார்க்கத்தில் ஓரினப்பட்டு நடக்காவிட்டால் ஸமஷ்டி தர்மம் சீர் பெற மாட்டாது. "ஸமஷ்டி தர்மம்" என்பது ஏகம் அனேகமாயும், அனேகம் ஏகமாயும் முறைப்படி ஒன்றிற் பலவும், பலவில் ஒன்றுமாய் நிகழ்ந்து வளருவதாம். மரங்கள் சேர்ந்தடர்ந்து தோப்பாவதும், தோப்புகள் சேர்ந்தடர்ந்து வனமாவதும் ஸமஷ்டிதர்மமாம். தோப்பு ஒன்றில் மரங்கள் பலவுண்டு." தோப்புகள் பல விருப்பினும் "வனம்" என்பது அவைகளில் எல்லாம் சமமாய் இருந்து ஒன்றில் மட்டு மில்லாமைபால், "பலவில் ஒன்றும்'. இந்த விதியை ஜனங்களுக்கும், ஜனசமூகத்துக்கும் பொருந்தப் பொருத்துவதே "Laws of National Growth" என்னும் ஜனசமஷ்டி தர்மமாகும் (Social Evolution). இனி ஸ்லாவ் ஜாதியாரின் குணகுணங்களை யெடுத்துச் சொன்னால் குழந்தைகளும் கிரகித்துக் கொள்வது சாத்தியமாகுமென்றெண்ணி கீழே அவைகளை எடுத்துரைக்கிறோம்.

ஸ்லாவ் ஜாதியாரின் குணகுணங்கள்.
(Their characterestics)

ஆதிகாலம் தொட்டு அவர்கள் 'குடியரசு' என்று சொல்கிற சமுதாயக் கட்டுப்பாட்டை யனுசரித்து வந்தவர்களாகத் தெரிகிறது. இதில் சமுதாய கோஷ்டி ஏற்பாடு அவர்களுடைய ஸ்வபாவத்துக்கு அடுத்ததென்று தெரிகிறது. இந்த ஏற்பாட்டை மேற்றிசை நாகரிகத்தில் ஒன்றாக அங்கே வேரூன்றச் செய்யவேண்டுமென்று அங்குள்ள சீர்திருத்தக்காரர்கள் பாடுபட்டுழைத்தும் அது கனவில் நினைவாயிருப்பதன்றி காரியத்தில் பலிக்கவில்லை. "அவரையில் ஒரு கொடியும் வடமனில் ஒரு குடியமிருந்தாற் போதும்" என்கிற பழமொழியொன்று நம்முள் வழங்கி வருகிறது. அதன் அர்த்தம் என்னவெனில், அவரை ஒரு கொடி யிருந்தாலும் அது எங்கும் பரவி யடர்ந்து விடுகிறதுபோல, வடம ஜாதியில் ஒரு குடியிருந்தால் அந்தக் குடும்பம் அதன் உற்றார் உறவுமுறையார் அபிமானம் மிகுந்த விசேஷ குணத்தால் சீக்கிரம் பரவி ஊரெல்லாம் வடம ஜாதியாகப் பரவி விடும் என்பதாம். அந்தமாதிரி ஸ்லாவ் ஜாதியாருக்குள் பந்துபரிபாலனமும் ஸ்வஜாதியாரென்கிற அபிமானமும் ஜாஸ்தியாக வுண்டு. இந்த அபிமானமும் ரக்தபாந்தவியத்திலிருந்து கைத்தொழில், வியவசாயம் முதலான 'தொழிலினம்' என்கிற பாந்தவியத்தால் தொழிலாளிகளை ஓரினமாகச் சேர்த்து அவர்களுக்குள் ஜாதிக்கட்டுப்பாட்டை யுண்டுபண்ணுவதாய் விரிவதாயிற்று.

இலக்ஷியபூரணக் குறைவு.
(Their defective Idealism.)

ஸ்லாவ்ஸ் ஜாதியாரைப்பற்றி பூர்வ சரித்திரங்களை ஆராய்ந்து பார்த்தால், அவர்களுக்குள் குடித்தன துரைத்தனமுறை (Democratic

Form of Government) யும், ஸ்வயேச்சைப் பிரியமும் (Love of Liberty) விசேஷமாயிருந்ததாகத் தெரியவருகிறது. இதன் குணங்கள் அவர்களுடைய சரித்திரத்தில் எங்குமிருக்கக் காணலாம், அல்லது கண்டு பிடிக்கலாம். இந்த லக்ஷணங்களெல்லா மவர்களிடமிருந்தும் அவர்களுடைய லக்ஷியம் பூரணமானதாக இல்லாததுபற்றி அவர்களுடைய ஸ்வயேச்சைப்பிரியம் காரியத்தில் பிரயோஜனகரமான துரைத்தனச் சீர்பாட்டை யுண்டு பண்ணவில்லை. வீரிய லக்ஷணமும், பூர்வீக நாகரிகமும், இன்னும் பல மேன்மைக் குணங்களு மிருந்தும் 'ஸ்லாவ்' ஜாதியைச் சேர்ந்த ஜனங்கள் ஒருவர் பின்னொருவராக ஸ்வாதீனமிழந்து அந்நியர்களுக் காளாகும் கதியடைந்து விட்டார்கள்.

பல்கேரியா தேசத்தார். (Bulgarians.)

ஸ்லாவ் ஜாதியாரில் பிரதம ஸ்தானத்திலிருந்து அதிக வல்லமையோடு விளங்கினவர்கள் "பல்கேரியா தேசத்தார்." இவர்கள் அனேக நூற்றுண்டுகளாகப் பிரபலம் பெற்றிருந்தும் 1912-13-ம் வருஷத்தில் நடந்த 'பால்கன் யுத்தத்தில்' அவர்கள்தோல்வியடைந்து திறனழிந்தவர்களானார்கள். இவர்கள் துருக்கி ராஜ்பத்துக் கடுத்திருந்ததால் அந்த ஜாதியின் இரத்தக்கலப்பும் கொஞ்சம் உண்டு. 10, 11-வது நூற்றுண்டுகளில் பல்கேரியா ஐரோப்பாவெங்கும் பிரபலமான பேர்பெற்ற இராஜ்ய வல்லபத்தோடு விளங்கியது. அப்புறம் (Byzantine) பைஸான்டைன் அரசர்களுக் குள்பட்டவர்களாகி 170-வருஷகாலம் கிரீஸ் தேசத்து கவர்னர்களால் ஆளப்பட்டுவந்தார்கள். பிறகு சிறிதுகாலம் ஸ்வதந்திரம் பெற்றிருந்து கடைசியில் ஸேர்வியா தேசத்தாரால் ஜெயிக்கப்பட்டார்கள்.

ஸேர்வியாதேசம். (Servia.)

ஸெர்வியாதேசம் இரத்தக் கலப்பில்லாத சுத்த ஸ்லாவ் ஜாதியார் தேசம். அது 13-ம் நூற்றுண்டில் உச்சத்திலிருந்து விளங்கியது. அப்பொழுது அதைச்சேர்ந்ததாயிருந்த தேசங்கள், இப்பொழுது ஆஸ்திரியாவோடு சண்டைபோட்டுவரும். 'ஸெர்வியா.' தேசமட்டுமன்றி, பால்கன் நாடுகள் எல்லாமும், தற்காலம் ஆஸ்திரியாவைச் சேர்ந்ததாயுள்ள க்ரோஷியா (Croatia), போஸ்னியா (Bosnia), டால்மேஷியா (Dalmatia), ஸ்லாவோனியா (Slavonia) மாகாணங்களெல்லாம் அதைச் சேர்ந்னவாக விருந்தன. பிறகு (Wars of the Crusade) என்று சொல்லும் மத சம்பந்தமான சண்டையில் 'ஸரஸன்ஸ்' என்னும் துருக்கர்கள் ஜெரூஸலேமைப் பிடித்துக்கொள்ளச் செய்த யுத்தத்தில், அவர்கள் வலிக்கு ஆற்றுமல், அவர்களோடு செய்த சண்டையில் அத்தேசத்து உயர்குல மக்களெல்லாம் மாண்டு மடிந்தார்கள். 14-வது நூற்றுண்டு முதல் 19-வது நூற்றுண்டுவரையில் இந்த ஸ்லாவ் ஜாதியார் நாடுகளெல்லாம் துருக்கர்களால் பிடித்துக்கொள்ளப்பட்டு இவர்களும் சீரழிந்து கெட்டார்கள். மான்டிநிக்ரோ (Montenegro), நாடும் ராகுஸா (Ragusa) என்னும் சிறிய குடியரசுநாடும்தான் துருக்கர் ஆட்சிக்குட்படாதிருந்தன. இப்பொழுது ஆஸ்திரியாவோடு சண்டைக்கு நிற்கும் ஸேர்வியா தேசத்தரசர்கள் விஷமக்காரர்களென்று பேர் பெற்றிருக்கிறார்கள். அவர்களில் ஒருவர் தாம் செய்த குற்றத்துக்காக இராஜ்யமிழந்து மிருக்கிறார். ஆனாலும் அவர்கள் ஸ்வதந்திரம் பெறச் செய்த பிரயத்தனங்கள் கடைசியில் பலிக்கலாயின. அத்தேசத்து இராணுவ வீரர்களெல்லாம் பயிரிடுங் குடிகளானதால், தேஹவலிமையும் மனோதீரமும் பொருந்தியவர்கள். அவர்கள் புஜபல பராக்கிரம விசேஷத்தைப் பார்க்கலானவர்கள் அவர்கள் வீர, தீர, சாமார்த்தியத்தைப் புகழ்ந்துகொண்டாடாமலிரார்கள்.

மோரேவியா. (Moravia.)

இது இப்பொழுது ஜெர்மனியைச் சேர்ந்த ஒரு மாகாணம். பூர்வத்தில் இதுவும் ஒரு

பிரபலமான ஸ்லாவ் ராஜ்யமாக விருந்தது. கி. பி. 9-ம் நூற்றூண்டில் இந்த இராச்சியம் இப்பொழுதுள்ள ப்ரஷியா முழுவதையும் அட்ரியாடிக் கடற்கரை யோரம்வரையில் ஒரு குடைக்கீழ் ஆண்டுவந்தது. கடைசியில் அது பொஹிமியாவினல் ஜெயிக்கப்பட்டதாயிற்று. ஸ்லாவ் ஜாதியாரில் ஸ்வதந்திரமிழந்து தாழ்மையடைந்த தேசங்களில் போலாண்ட் ராஜ்யம் ஒன்றைத்தவிர இந்த மொரேவியா ராஜ்யம் அதிரிவிகமானது. அஃதோடு, பாவம், அதன் பொல்லாதவிதி அதைப் பூண்டற்றுப் போகும்படி செய்துவிட்டது. இப்பொழுது அது ஆஸ்திரியாவில் ஒரு மாகாணத்தின் பேராக விருக்கிறது. பொஹிமியாவுக்கும் மொரேவியாவுக்கும் இடையில் "மொரேவியன் ரேஞ்ச்" என்று ஒரு சிறு மலைத்தொடரிருக்கிறது.

பொஹிமியா. (Bohemia.)

இதுவும் இப்பொழுது ஆஸ்திரியாவில் ஒரு மாகாணமா யிருக்கிறது. பூர்வத்தில் இதுவும் ஒரு பிரபலமான ஸ்லாவ் ராஜ்யமாக விருந்தது. பொஹிமியாவிலுள்ள "ஸ்லாவ்ஸ்"க்கு "ஜெக்ஸ்" (Czechs) என்று பேர். பூர்வத்தில் ஐரோப்பா கண்டத்தின் நாகரிகத்துக்கெல்லாம் இது மத்யஸ்தானமா யிருந்தது. 13-வது நூற்றூண்டின் முடிவில் (Ottokar II) இரண்டாவது ஆட்டோகர் என்னும் பொஹிமிய ஸ்வதேசராஜன் அத்தேசத்தையும் அதையடுத்த மொரேவியா, ஸைலீஷியா (Silesia), லூஸிடானியா (Lusetania) இந்நாடுகளையும் ஆண்டுவந்ததன்றி சிறிது காலம் ஆஸ்திரியா, ஸ்டிரியா (Styria), கரின்தியா (Carinthia), கார்னியோலா (Carniola) நாடுகளையும் சேர்த்து, பெர்லின் முதல் அட்ரியடிக் கடல் வரையிலுள்ள பிரதேசங்களையெல்லாம் ஒரு குடைக்கீழ் ஆண்டுவந்தான்.

பூர்வீக "ப்ரேக்." (The Ancient Prague.)

பூர்வத்தில் "ஹோலி ரோமன் எம்பையர்" என்று பிரபலம்பெற்று விளங்கிய மஹாராஜ்யத்தின் சக்ரவர்த்தியாகிய நாலாவது சாரல்ஸ் (Charles IV) பொஹிமியாவின் தலைநகராகிய 'ப்ரேக்' (Prague) நகரைத் தனது இராஜ்யத்துக்குப் பிரதானப் பட்டணமாகக்கொண்டு இராஜ்ஜியபாரம் நடத்திவந்தார். இப்படியாக அது அக்காலத்தில் ஐரோப்பா முழுமையிலும் பிரபலம்பெற்ற பிரதமநகராகவிருந்தது. கடைசியில் அதன் கதி யென்னவாயிற்றென்றால்,—

(The House of Hapsburg.)

"ஹாப்ஸ்பர்க் வம்சம்."

ஹாப்ஸ்பர்க் வம்சத்தாரால் அது ஜெயிக்கப்பட்டு ஆஸ்திரியாவில் ஒரு பாகமாகச் சேர்த்துக்கொள்ளப்பட்டதுமன்றி ஆஸ்திரிய அரசின் கொடுமையினல் அதனுடைய பாஷையையும் ஜாதியையும்கூட மறந்துபோகும்படியான கேவல ஸ்திதிக்கு வந்துவிட்டது. 19-ம் நூற்றூண்டில் ஸ்லாவ் ஜாதியாருக்கு மறுபடியும் நல்லகாலம் பிறந்தவரையில் ருஷியர் ஒருவரைத்தவிர மற்ற 'ஸ்லாவ்' இனத்தாரெல்லாரும் ஸ்வதந்திர மிழந்து அந்நியரதாட்சிக்குள்ளாயிருந்தார்கள். பல்கேரியா, ஸெர்வியா, கிரீஸ் இம்மூன்று தேசங்களும் துருக்கர் ஆட்சியிலிருந்து மீட்சிபெற்று ஸ்வதந்தரம் பெறவே, பொஹிமியாவும், போலாண்டும் ஸ்வதந்திரம் பெறவேண்டுமென்கிற ஆசைதூண்ட உள்ளக்கிளர்ச்சி யுண்டாக வுணர்ந்தார்கள். அவர்கள் எதிர்த்துச் சண்டை செய்து ஸ்வதந்திரம் பெற முடியாவிட்டாலும் ஆஸ்திரியா அரசாங்கத்தாரின் கட்டுக்குள்பட்டிருந்து தானே துரைத்தனப் பாங்கின்படி அனேக ஸ்வதந்திரங்களும் பாத்தியதைகளும் அளிக்கப்பெற்றூர்கள்.

(Their Love of Native Language.)

ஸ்வபாஷைப்பிரியம்.

இந்த ஸ்வதந்திரங்களைக்கொண்டு ஸ்வபாஷையையும் அவர்களுடைய சொந்த சித்திர வேலையையும் சங்கீத ஸாஹித்திய மெட்டுகளையும், அவர்களுடைய ஸ்வஜாதி லக்ஷியங்களை

யும் ஜீர்ணோத்தாரணம் செய்து மறுபடியும் விர்த்திக்குக் கொண்டுவந்தார்கள். இதனால் ஸ்வஜாதீய லக்ஷியம் அதிகரித்ததன்றி அந்நிய லக்ஷியம் ஆகாததென்று தலைகாட்டா தொழியவும் தலைப்பட்டது. ப்ரேக் நகரில் தெருத் தெருவா யலைந்து பார்த்தாலும் ஒரு ஜெர்மன் பேர்கூடக் காண்பது கஷ்டம். கடைக்காரர்கள்கூட தங்கள் சரக்கு விலையாகவேண்டி ஜெர்மன் குலப்பேரை மாற்றி பொஹிமியன் பேர் போல் விளங்கச் செய்துகொள்கிறார்கள். ஆஸ்திரியாவின் தலைநகராகிய வியன்னாவில் கூட ஜெக்ஸ் ஜாதியார் தாழ்ந்த கையாகத் தோற்றாமல், தங்கள் ஸ்வபாஷையையே பேசி வருகிறார்கள். இப்பொழுதுண்டாயிருக்கும் ஆஸ்திரியா-ஸெர்வியா ருஷியா சண்டையில் ஜெகஸ் ஜாதியார் தம்மினத்தாரோடு சண்டை செய்ய மனமில்லாதவராய்த் தவித்துத் துடிக்கிறார்கள்.

யுத்தமத்தியில் நேர்ந்த சம்பவம்.

(An Incident of War.)

இங்கே ஒரு சம்பவம் குறிக்கத் தக்கது. ருஷியர்களுக்கும் ஆஸ்திரியாவுக்கும் நடந்து வரும் சண்டையில் இரு சைனியங்களும் சண்டைமுகத்தில் எதிர்த்து நிற்கையில், ருஷியர் பக்கத்தாருக்கும் ஸ்லாவ் ராணுவஸ்தர்களுக்கும் சண்டைமுகத்தில்தானே பேச்சுவார்த்தை நடக்கிறதுண்டாம். அவர்கள் தங்களுடைய சுபாஷையைப் பேசக் கேட்டபின் அவர்கள் பகைவரென்று மதித்து துப்பாக்கி பிடித்துச் சுடமாட்டாமல் ஆயுதங்களை நழுவ விட்டுவிட்டு எதிர்க்கக்ஷிக்குப் போய்விடுகிறார்கள். அனேகம் பாளையங்கள் தம் இனத்தாரோடு சண்டைபோட மனமிசையாமல் வேணுமென்று கைதிகளாக வந்து அகப்பட்டுக் கொள்கிறார்கள். பொஹிமியா தேசத்தார் மிக்க உணர்ச்சியும் நுண்ணறிவுமுள்ளவர்கள்: ஆஸ்திரியாவில் அதிக செல்வாக்குள்ளவர்கள். ஆனாலும் ஸ்வஜாதி யபிமானம் மிகுந்தவர்கள். தம்மினத்தோடு சண்டைசெய்ய மனந் தாளாது தவிக்கிறார்கள்.

சந்தத்திலும் பெந்துத்துவம் வலியது.

(Blood is Thicker than Water.)

இதை யறிந்து ஆஸ்திரியா அதிகாரிகள் பொஹிமியா, க்ரோஷியா, டால்மேஷியா இந்த மாகாணங்களிலுள்ள நகரமாக்களை—முனிசிபல் சேர்மன், காலேஜ் ப்ரொபெஸர், ராயஸக்காரர்கள் போன்றவர்களை—பிடித்து வைத்துக் கொண்டு ஸ்லாவ் இராணுவ வீரர்கள் விசுவாசகாதகம் செய்யாமலிருக்க அவர்களுயிரை அடைக்கலமாக வைத்துக்கொண்டிருக்கிறார்களாம். ஸ்லாவ் இராணுவ வீரர்களில் அனேகர் தம்மினத்தாரோடு சண்டைசெய்ய இணங்காததற்காக நூற்றுக்கணக்கானபேர் மிலிடெரி சட்டப்படி சுட்டுக்கொல்லப்பட்டார்களென்று தெரியவருகிறது. 'ஸ்லாவ்' இராணுவவீரர்கள் ஆஸ்திரியா இராணுவாதிகாரிகள் ஜெர்மன் பாஷையில் உத்தரவு கொடுத்தால் அதற்கு கீழ்ப்படிகிறதில்லையென்கிற பிடிவாதம் கொண்டு நடந்ததால் அனேக வருஷகாலம் இது இராணுவ அதிகாரிகளுக்கு வெகு தொல்லையாக விருந்தது வாஸ்தவம் எனகிறார்கள். உண்மையாகவே அனேகருக்கு ஜெர்மன் பாஷை பேசத் தெரியாது; தெரிந்தவர்களும் அதைப் பேசுவதுமில்லை.

"ஜாதி கெட்டுப்போகவில்லை."

(Resisting attempts at Denationalisation.)

அவர்களுடைய ஸ்வஜாதி யபிமானத்தைக் கெடுக்கவென்று ஆஸ்திரியர் செய்த முயற்சியை அவர்கள் முற்றும் எதிர்த்துப் பிடிவாதமாய் தங்கள் ஸ்வஜாதி யபிமானத்தைக் காப்பாற்றி வளர்த்துவருகிறவர்களா யிருக்கிறார்கள். ஆஸ்திரியா சைனியக்களில் இப்படிப்பட்ட ஸ்லாவ் ஜாதிப் பட்டாளங்கள் எத்தனையோ இருக்கின்றன. அவையெல்லாம் அத்தேசத்து இராணுவ பலத்துக்குக் குறைச்சலேயன்றி அனுகூலமில்லை. இரண்டுமாசமாக நடந்துவரும் சண்டையில் இதனால் விளைந்த கெடுதிகள் எவ்வளவென்று நிதரிசனமாகத் தெரிந்துகொண்டார்கள். சண்டை நடந்து

கொண்டிருக்கையில் அதிகமாய் எழுதுவது சாத்தியமாகவில்லை.

தனிவழி. (Independence of Spirit.)

ஜெர்மானிக் ஜாதியாருக்கும் ஸ்லாவ் ஜாதியாருக்கும் நடந்துவந்த தீராப் போராட்டத்தில் மதவிஷயம் மிகவும் முக்கியமானதா யிருந்தது. "ஹோலி ரோமன் எம்பையர்" மூலமாய் வந்த கிறிஸ்துமத போதனையை யெதிர்த்து கீழ்த்திசையிலிருந்து வந்த கிறிஸ்துமதத்தை யங்கிகரித்த ஸ்லாவ் ஜாதியார், ரோமாபுரியிலிருந்துவந்த காதொலிக் மதத்தையனுசரித்த ஜர்மானிக் ஜாதியார், 'கேய்லிக்' ஜாதியாருக்கு இயற்கைவிரோதிகளாயிருந்தார்கள். மத விஷயங்களிலும் துரைத்தன விஷயங்களிலும் பிறர்வழிபற்றாது அவர்கள் தனிவழி நடப்பாரா யிருந்தனர். இது ஆதிதொட்டு அவர்களிடத்து விளங்கிய குணம்.

மதவிஷயம் (The Religious Question)

ரோமா புரியிலுள்ள "போப்" அதிகாரத்துக்கு விரோதமாக ஆங்கிலேயமத சீர்திருத்தம் ஏற்பட்டது ஆதியில் இங்கேதான் உற்பத்தியாயிற்று. அந்த மத வித்து விதைத்தவர் ஜான் ஹஸ் (John Hus) என்பவர். இவர் பொஹிமியாவிலுள்ள 'ஜெக்ஸ்' ஜாதியைச் சேர்ந்தவர். துரைத்தன விஷயங்களிலும் மத விஷயங்களிலும் ஜெர்மன் செல்வாக்குப் பலிக்காமற் போக அரும்பாடு பெரும்பாடு பட்டு உழைத்தவர் இவர். கடைசியில் இவர் பெருமுயற்சி பலிக்காமற் போயிற்று. (Serbo-croats) ஸர்ப்ஸ் ஜாதியில் க்ரோஷியா வாசிகளான 'க்ரோட்ஸ்' கடைசியில் துருக்கர் அரசாட்சிக்காளான பொழுது காதொலிக் மதத்தையாவது மகம்மதிய மதத்தையாவது ஏற்றுக்கொள்ளவேண்டு மென்கிற நிர்ப்பந்தம் ஏற்பட்டபொழுது, ரோமன் காதொலிக்ஸ் மதத்தை யங்கிகரிப்பதிலும் மகம்மதியராவோமென்று அம்மதத்தைச்சேர்ந்து விட்டார்கள். பரஷ்யாவில் அனுஷ்டானமாய் வரும் மதம் 'லூதர்' ஏற்பட்டுச் சீர்ப்படுத்திய கிறிஸ்துமதம். இந்தமதக் கொள்கை 'ஸ்லாவ்' ஜாதியாருக்கு ஹிதமாகப் படவில்லை. ப்ரஷியாவையடுத்துள்ள பொஹிமியா தேசத்தின் சீர்திருத்தக்காரர்களும் இம்மதக் கொள்கையைக் கவனித்தார்க ளில்லை. தற்காலம் 'பொஹிமியா' காதொலிக் மதத்தை யனுசரிக்கும் தேசமாகச் சொல்லிக்கொள்கிறது. ஜான் ஹஸ் என்பவரை அவர்களுடைய ஜாதியிலுதித்த ஓர் பெரிய தேசாபிமானியாகக் கொண்டாடி வருகிறது. போலாண்ட் தேசத்தைச் சேர்ந்த 'போல்ஸ்' மட்டும் ஆதிமுதல் ரோமிலிருந்து வந்த கிறிஸ்துமதக்கொள்கையை யனுசரித்தவர்களாயிருந்தார்கள். இதனால் அவர்களுக்கும் ருஷியர்களுக்கும் தீராத போராட்டமுண்டு.

பாஷை (Language.)

'ஸ்லாவ்' ஜாதியாரின் பாஷை அவர்கள் வசிக்கும் எல்லாத் தேசங்களிலும் ஓரினப் பட்டதாகவேயிருக்கிறது. எல்லா ஸ்லாவ் தேசங்களிலு மிருந்துவந்த பிரதிநிதிகள் சபைகூடிப் பேசியதில் ருஷியா, பல்கேரியா, ஸெர்வியா, மான்டிநிக்ரோ, க்ரோஷியா, டால்மேஷியா, போலண்ட், பொஹிமியா முதலான தேசங்களிலிருந்துவந்த பிரதிநிதிகள் ஒவ்வொருவரும் அவரவர் தாய் பாஷையில்பேச அது மற்ற எல்லாருக்கும் புரிவதாயிருந்தது. இது கற்றூர் குழாத்தின் நடபடிக்கை. படியாத மூட ஜனங்கள் பேசும்பாஷை இதைவிட அதிக வித்தியாசப்பட்டிருக்கும். 'பொலிஷ்' பாஷையும் 'ஜெக்ஸ்' (பொஹிமியன்) பாஷையும் 'லத்தீன்' லிபிகளில் எழுதப்பெற்று ஓரினமாகவே யிருக்கிறது. 'ஸெர்போ-க்ரோஷியன்' பாஷை (ஏறத்தாழ) பல்கேரியன்ஸ், ஸெர்வியன்ஸ், க்ரோட்ஸ், தென்னுஸ்திரியாவிலுள்ள ஸ்லோவினீஸ் (Slovenes) இவர்கள் எல்லாராலும் பேசப்பட்டு வருகிறது. ருஷிய பாஷைமட்டும் ஸிரில்லிக் லிபியில் (Cyrillic Character) எழுதப்பெற்று ஸலாவ்-பாஷையல்லாத 'மங்கோல்' வார்த்தைகள் அதிகமாய்ச் சேர்ந்ததாக விருக்

கிறது. ஆனால் இதற்கும் மற்ற 'ஸ்லாவ்' பாஷைகளுக்குமுள்ள வித்யாஸம் எந்த ஸ்லாவ் ஜாதியானும் இலகுவில் கற்றுக்கொள்ளக் கூடியதாயிருக்கிறது.

அங்க அடையாளம் (Physical Features.)

ஸ்லாவ் ஜாதியாரின் அங்க அடையாளங்களில் விசேஷமான வித்யாசமில்லாவிட்டாலும் அவர்கள் வர்ணத்தில் ஜெர்மன்ஸ், ஸ்காண்டிநேவியன்ஸ் இவர்களைவிடச் சிறிது லேசாயும், நீலம் அல்லது வெண்மை கலந்த கறுப்பு விழிகளும் உடையவர்களாயிருப்பதாகச் சொல்லலாம். 'ஜெர்மன்' ஜாதியார் பொன்னிறம், அல்லது செம்பட்டைநிறம் மிகுந்தவர்களாய் கருநீலம் பாய்ந்த கண்களுடையவர்கள். 'ஸ்லாவ்ஸ்' அவ்வளவு நன்றாக வர்ணம் பாய்ந்தவர்களல்ல. லேசானவர்ணமும் வலுத்து உறம்பெற்ற தேககட்டும் உடையவர்கள். கல்விப் பயிர்ச்சியிலும் ஸம்பிரதாய விசேஷத்திலும் ஜர்மானிக் ஜாதியாருக்கும் அவர்களுக்கும் வித்யாசமில்லாததுபோல் தோற்றலாம். ஆனால் உள்ளத் துணர்விலிருக்கும் 'ஸ்வபாவம்' என்கிற பிறவிக்குணத்தில் அவர்களுக்கும் மற்ற எல்லா ஐரோப்பிய ஜாதியார்களுக்கும் சொல்லிக் காட்டமுடியாத அதிசூக்ஷ்மமான வித்தியாசமொன்றிருக்கிறது. அதை எடுத்துரைப்பது கஷ்டசாத்தியம்.

அவர்கள் மனோபாவம். (Mental Attitude.)

அவர் களிடத்திலுள்ள அந்த சூக்ஷ்மகுண விசேஷத்தை "அயுக்தம்" என்று சொல்லலாம் போலும். அப்படியென்றால் என்னவெனில், ஜர்மானிக் ஜாதியாரைப்போல் முகம் கோணாமல் எதையும் ஞானபரமாக 'ஒட்டியும் ஒட்டாததுபோல்' எடுத்துக்கொண்டு தன்னுள்ளமறியத் தனிநினைந்திருக்கும் சாமர்த்தியம் அவர்களுக்கில்லை. 'ஸெல்ட்' (Celt) ஜாதியாரைப்போல் மனோரதமேறிச் செல்லும் குணமும் அவர்களிடமில்லை. 'ஸ்லாவ்ஸ்' அதிக ரோஸமும் உணர்ச்சியுமுள்ளவர்கள். எதுவும் மனதில் உறுத்தப்பெறும் சுபாவமுடையவர்கள். உள்ளத்திற்பட்டதை யொளிக்கும் ஸ்வபாவம் போதாது. படபடத்த ஸ்வபாவமும் அஃதோடு வந்தது வரட்டுமென்று பொறுக்கும் குணமும் அவர்களிடத்து விசேஷமாயுண்டு. படபடப்பும் பொறுமையும் சேர்ந்திருக்கிற 'முன்பின் ஒவ்வாத சேர்க்கைக்குணம்' அவர்களிடத்திருப்பது விசேஷம். (இதில் அதிரவிகமான மனோதத்துவ சூக்ஷ்மமிருக்கிறது. ஆனால் அதைப்பற்றி விசாரிக்க இது ஸமயமல்ல. சரித்திர ஆராய்ச்சிசெய்து உணர்ந்தவர்கள் உணர்த்தியுள்ளதை யெடுத்துரைப்பதேயன்றி வேறெதுவும் சொல்ல நமக்கு அதிகாரமில்லை.)

குணவிசேஷம். (Temperament.)

ஸ்லாவ்ஸ் ஜாதியாரின் குணவிசேஷம் இன்னொன்றுண்டு. அவர்கள் மோஹசித்த முடையவர்கள். இதனால் உலக சம்பிரதாயப்படி உண்மைபேசுவது அவர்களுக்குக் கஷ்டமாயிருக்கிறது. இந்தக்குறையை கல்விப் பயிற்சியினால் ஒருசாரார் திருத்திக்கொண்டிருக்கிறார்கள். படியாதவர்களிடத்தில் இந்த துர்க்குணம் விசேஷமாக நிறைந்திருக்கிறது. ஸ்லாவ்ஸ் விதிவசத்தில் நம்பிக்கையுள்ளவர்கள். ஆனால் குழந்தைகளைப்போல் இலகுவில் சந்தோஷ பூரிதராகும் குணமும் அவர்களிடத்திலிருக்கிறது. அவர்கள் ஸ்வப்னபாவ சித்தர்கள். ஸ்வப்னலோகத்தில் எல்லாம் சாத்தியமாகும். ஆதலால் அவர்கள் எண்ணும் எண்ணங்களுக்கு வரையறையில்லை. அவர்களில் பயிரிடுங்குடிகள் "உழுதுண்டுவாழ்வார்" எல்லாரையும்போல், தந்திரமும், சூக்ஷ்மபுத்தியும், உலகஞானமும், அவர்களனுபவத்தில் கண்ட பழமொழி ஞானமும் உடையவர்கள். அவர்களில் 'படித்தவர்கள்' 'கல்விகரையில' என்பதையுணராத 'கற்றறிமூடர்களாய்' கர்வங்கொண்டு தலைகவிழ்ந்து போகிறவர்களாயிருக்கிறார்கள். "டுக்ருங்கரணே" யென்கிற கரட்டுவாத சித்தமும், 'வாச்சா மகோசரமாய்ப்பேசும் சுபாவமும், அநுபவத்தால்வரும் நடுவுநிலையின்றி உற்சாகம்சேர்ந்தபொழுது பொங்கி

வழிந்துபோகிற சித்தம், சங்கடம் நேர்ந்த காலத்தில் கோழைப்பட்டு காரிய சித்தியைத்தராது என்பதை அவர்கள் உணரவில்லை. இந்தத்தான் நம்மவர்கள் "எட்டுச்சுரைக்காய் கறிக்குதவாது" என்று பழமொழியாகச் சொல்கிறார்கள்.

"THEIR HERITAGE OF UNCONQUERED AND UNCONQUERABLE SOULS."

"உள்ள தெல்லாமிழந்தாலும்
உள்ள மொன்றை யிழக்கவில்லை."

இப்படியாக ஸ்லாவ்ஸ் உலகவாழ்க்கையில் தாழ்மைப்பட்டு உள்ளதை யெல்லாமிழந்தாலும் உள்ளம் என்கிற மனச்சாக்ஷி யொன்றை மட்டும் 'இழந்துவிடவில்லை. 'பார்க்காய்க்குப் பங்கைவிற்றவன்' கதையாகவும் "பெற்றதாயை விற்றடிமை கொள்ளுகின்ற பேதைகள்" என்றார் போலும், அவர்கள் தம் உள்ளத்துணர்வாகிய மனச்சாக்ஷியைமட்டும் இழக்கவில்லை. அதை ஜயிப்பாருமில்லை; அது ஜயிக்கப்படத் தக்கதுமில்லை. என்றும் அணையாத இந்த அற விளக்கைக்கொண்டு அவர்கள் "ஜாதிஸ்வதந்திரம்" என்கிற வெளிச்சம் போட்டுக்கொண்டு கிளம்பி யிருக்கிறார்கள். இவர்கள் உருவத்திற் சிறியராயினும் தீரத்திற் பெரியராயிருக்கிறார்கள். இப்படிப்பட்ட பூர்வீக ஜாதியாருடைய ஸ்வதந்திரங்களைக் காக்கவென்றே பிரிடிஷ் ப்ரெஞ்ச் ருஷியர்களானவர்கள் ஐக்கிய நேசம் பூண்டு கத்தியுருவிச் சண்டைசெய்யத் தலைப்பட்டிருக்கிறார்கள்.

ஆஸ்திரியா-ஹங்கேரி.

(Austro-Hungarian Monarchy.)

ஆஸ்திரியா-ஹங்கேரியிரண்டும் சேர்ந்து ஒன்றாய்விளங்கும் அரசாங்கத்தார் வெகு காலமாக ஒற்றுமையின்மையால் சிதறுண்ட இந்த ஸ்லாவ் ஜாதியார்களை தம்மரசாட்சிக்குட்படுத்திக் கொடுங்கோல்புரிந்து ஆண்டு வந்தார்கள். இப்பொழுது அவர்களுக்கு நல்லகாலம் வந்துற்றபொழுது டியூடன்ஜாதியாரானஜெர்மனியரசாங்கத்தார் அவர்களைத் தலையெடுக்கவிடாது நசுக்கத் தலைப்பட்டிருக்கிறார்கள். அப்படி நசுக்கிவிடப் பார்த்திருக்கக் கூடாதென்று தான் இந்த பிரமாதமான யுத்தம் தொடுக்கப்பட்டிருக்கிறது. ஸ்லாவ்ஸ உச்சத்திலிருக்கையில் ஐக்கிய பத்தியத்தின் அருமை பெருமையையுணர்ந்து அதை யனுசரித்திருந்தால் இப்படிச் சிதறுண்டு சின்னபின்னப்பட்டிருக்க மாட்டார்கள். அந்த உண்மையை அவர்கள் தக்ககாலத்தில் உணராமையினால்தான் இத்தனைகாலமாகத் துன்பமனுபவித்தார்கள். இப்பொழுது அவர்கள் தலை யெடுக்கும்பொழுது ஜெர்மனி ராஜாங்கத்தார் பேர்லினிலும் வியன்னாவிலும் செல்வாக் குடையவர்களாய் அவர்களை நசுக்கிவிடப் பார்க்கிறார்கள்.

பேர்டினண்ட் இளவரசர்.

(The late Archduke Ferdinand.)

மூப்பேறிய ஆஸ்திரியா-ஹங்கேரியின் சக்ரவர்த்தியாகிய ப்ரான்விஸ் ஜோஸப் சகரவர்த்தித் திருமகனாகிய ஆர்ச்-டியூக் ப்ரான்ஸிஸ் பேர்டினண்ட் இளவரசர் உயிரோடிருந்திருப்பாரானால் அவர் இந்தச் சண்டைக் குடைந்தையா யிருந்திருக்க மாட்டாரென்கிறார்கள். அப்பொழுது ஸ்லாவ் தேசங்களெல்லாம் ஆஸ்திரியா-ஹங்கேரியின் மேலரசுக் குட்பட்டு ஐக்கிய நாடுகளாகச் சேரும்படியான ஏற்பாடு செய்திருக்கலாம் என்கிறார்கள். அப்படிப்பட்ட ஏற்பாடு சமைந்தால் ஐரோப்பாவின் மத்தியபாகத்தில் ஸ்லாவ்ஸ ஜாதியார் செல்வாக்கு மிகுந்த வலியுடைய இராஜாங்கம் ஏற்பட ஹேதுவாகும். இது ஜெர்மனிக்கு (அதாவது ப்ரஷ்யாவுக் குடந்தையானவர்களுக்கு) விரோதமாகும். ஏனெனில் ஐரோப்பாமுழுமையும் அவர்கள் செல்வாக்கே பரவவேண்டுமென்பது அவர்களுடைய நோக்கமும் நோன்புமாயிருக்கிறது.

(The Intrigue of Teutonic Germany.)

டியூடன் ஜாதியார் மித்திரபேதம்.

ஆதலால் பூர்வம் கொள்ளைத் தலைவர்களாயிருந்து பிறகு டியூடானிக் யுத்தவீரர்களென்று

பேர் வைத்துக்கொண்டு கடைசியில் ப்ரஷ்யாவைப் பிடித்துக்கொண்டு 1871-ம் வருஷம் முதல் "ஜெர்மன் எம்பைபர்" என்கிற ஐக்கிய ராஜ்யத்தை ஸ்தாபித்து அதற்கு அவர்கள் தலைவராகிய "ஹாஹென்ஸால்லர்ன்" வம்சத்தரசர்களே சக்ரவர்த்தியாக வரத்தக்கவர்களென்று ஏற்பாடு செய்துகொண்டு சென்ற 30-வருஷகாலத்தில் கல்வி, ஐசுவரியம், ஜனப்பெருக்கு சைனியவிருத்தி யெல்லாவற்றிலும் பெருமைபெற்று விளங்கிய ஜெர்மன்ஜாதியார் (டியூடானிக் ஜர்மன்ஸ்) ஆஸ்திரியாவுக்கும் ஸெர்வியாவுக்கும் மித்திரபேதம்செய்து அவர்களுக்குள் உண்டான சண்டை காரணமாகத் தாங்களும் சண்டைக்குக் கிளம்பி யிருக்கிறார்கள்.

"ஜெர்மன் எம்பைபர்" என்பது எல்லாங்கூடி இன்றளவு 43-வருஷ வாழ்வுள்ளதென்று சொன்னோமே. அதிலும் எல்லாம் ஒரு இனத்தாரில்லை. ப்ரஷ்யாவைச்சேர்ந்த சிலரே மேன்பட்டகையாக விருக்கிறபடியால் அவர்கள் செல்வாக்கு நடக்கிறது. 10,12-சிறிய நாடுகள்சேர்ந்த ராஜ்யத்தில் பூர்விகமான ஜர்மானிகநாடுகள் கல்வியிலும், வித்தையிலும் பிரபலமாயிருந்தன. அருமையான கவிசக்ரவர்த்திகளும், சங்கீத ஸாஹித்ய வித்வான்களும், தத்துவஞானத்திற் சிறந்தவர்களும் அந்நாடுகளிலிருந் துண்டானார்கள். அப்படிப்பட்டவர்களில் உலகப்பிரஸித்திபெற்றவர்கள் கீதே (Goethe), ஷில்லர் (Schiller), லெஸ்ஸிங் (Lessing), ஹிஜெல் (Hegel), காண்ட் (Kant), பிச்டி (Fichte), வாக்னர் (Wagner), மோஸார்ட் (Mozart), முதலானவர்கள்.

தற்காலத்து (ப்ரஷியன்) ஜெர்மனி.

ப்ரஷியா வசப்பட்டு அத்தேசத்தால் முன்னுக்குவந்த இக்காலத்து ஜெர்மனியில் சாஸ்திரஞானத்துக்கும் விறபதிக்கும் குறைவில்லை. ஆனால் சென்ற 40-50-வருஷங்களில் பேர்போனவர்கள்:-பிஸ்மார்க் (Bismarck), மோல்ட்க் (Moltke), ட்ரீட்ஷ்க் (Trietschke), உவில்லியம் சக்ரவர்த்தி இவர் போன்றவர்களாயிருக்கிறார்கள். ப்ரஷியர்களுடைய குணவிசேஷ மென்னவெனில், எதையும் பூரணமாகச்செய்து உருப்படுத்தும் சாமர்த்தியம் அவர்களுக்கு அதிகம் உண்டு. அதைக்கொண்டு அவர்கள் சென்ற 30-வருஷகாலத்தில் 300-வருஷத்திலாகக்கூடிய அபிவிருத்தியை ஊர்ஜிதத்துக்குக் கொண்டுவந்திருக்கிறார்கள்.

(1) கல்வி யபிவிர்த்தி:—இதை எங்கும் ஒரேமாதிரியாக ஆக்கி எல்லாப் பிள்ளைகளுக்கும் இராணுவத்தில் சேவகம் செய்யப் பழக்குவித்தல்.

(2) உபாத்தியாயர்களைக்கொண்டு புதிய கொள்கைகளைப் போதித்துப் பரவச்செய்யல்.

(3) உலகெலாம் கண்டதிசயிக்கும்படியான அபிவிர்த்தி பேற்படும் அற்புதக் கட்டுப்பாடும் செய்து அரசன் நாவசைந்தால் நாடசையும்படியான ஏற்பாடுகளை ஊர்ஜிதத்துக்குக் கொண்டுவந்திருப்பது. இயந்திரம் வேலை செய்வதுபோல் எல்லாம் கச்சிதமாக வேலை செய்யும்படி செய்திருக்கிறார்கள்.

இப்படியாக "டியூடானிக் நைட்ஸ்" அவர்கள் பூர்வோத்தரத்துக்குத் தக்கபடி ஜெர்மனி முழுவதையும் சண்டைக்குச் சித்தமான யந்திரமா யாக்கிவிட்டார்கள். முற்காலத்திய வித்வத்ஞானப்பேறு தற்காலத்திய கைத்தொழில், இராணுவச் சீர், சண்டைக்கு வேண்டிய ஆயுதங்கள், கப்பல்கள் ஆகாய ரதங்கள் இவைகளைப் பூர்ண பக்குவத்துக்குக் கொண்டுவரும் காரிய விசேஷத்துக் குடந்தையாகச் செய்யப்பட்டிருக்கிறது. "திருடனுக்குத் தோன்றும் திருட்டுப் புத்தி" யென்கிறதுபோல சண்டைக்காரனுக்குத் தோன்றும் சண்டை யுக்தி. இந்த வித்தையில் பூர்வம் கொள்ளைத்தலைவர்களாயிருந்து, பிந்தி "டியூடானிக் நைட்ஸ்" என்கிற யுத்த வீரர்களாகத் தலையெடுத்து நேபோலியன் காலத்துச் சண்டைகள் முடிந்ததும் ராஜ்யத் தலைவர்களாக ஏற்பட்டு விளங்கிய டியூடானிக் ஜாதியார் பரம்பரை யப்பியாஸம் மிகு

ந்தவர்கள் என்பதை யெல்லாரும் ஒப்புக் கொள்ள வேண்டியதா யிருக்கிறது.

ஸ்லாவ்ஸ் பூர்வந்தொட்டு சாந்தமும் சமாதானமும் உள்ளவர்களாயிருக்க, டியூடனிக்ஜெர்மன்ஸ் அல்லது ப்ரஷ்யர்களின் இனத்தாராகிய தற்கால ஜர்மனியைச் சேர்ந்தவர்கள் சண்டைசச்சரவிலே தலையிட்டுத் தேடி முன்னுக்கு வந்தவர்களா யிருக்கிறார்கள். இப்படியாக ஸ்வபாவமாகவும் ஆதிகாலந்தொட்டும் வைரிகளான இருதரத்தாரும் இப்பொழுது மல்லுக்கு நிற்கும்படி நேரிட்டிருக்கிறது. உலகெலாம் இரு கக்ஷியாகப் பிரிந்து யுத்தம் நடத்துகிறார்கள்.

"தர்மமே ஜயம்."

'டியூடன்ஸ்' கைவலுத்தால்இங்கிலாந்துக்கு நல்லதா 'ஸ்லாவ்ஸ்' கைவலுத்தால் இங்கிலாந்துக்கு நல்லதா வென்பது கேள்வி. டியூடன்ஸ் வலுத்தால் ஜெர்மனி (ப்ரஷ்யா) தான் இட்டது சட்டமென்கும். ஸ்லாவ்ஸ் கை வலுத்து ஜயித்தால் ருஷியா பங்குக்கு வரும். தற்காலம் டியூடன்ஸ் கொட்டத்தை யடக்குவது அவசியமா யிருக்கிறது. பின்னால் என்ன நேருமோ இப்பொழுது சொல்லமுடியாது.

இராஜதந்திரமென்பது எப்படியும் தந்திர வித்தையே. அதில் தந்திர யந்திரப் பிரயோகம் எப்படியும் இருக்கும். பிரயோக விதியின்னதென்று கற்காலமே யன்றி கர்த்தா காரண காரிய நிர்ணயை எக்காலத்துக்கும் ஒன்றேயாகச் செய்வது பொருந்தாது. காலதேச வர்த்தமானமிவைகளுக்குத் தக்கபடி அவை மாறுபட்டு வரும். ஆகையால் ஸ்வதந்திரத்தின்மேல் நோக்கமுள்ளவர்கள் தர்மத்தைத் தலைமையாகக்கொண்டு கர்ம தர்மத்தைக் கற்றுணர்ந்து நிஷ்காம்ய கர்மம் செய்துய்தால் உய்யலாமேயன்றி ஸ்வகாரியப் புலிகளா யிருந்து எப்போதும் என் பக்ஷமே ஜயமாக வேண்டுமென்றால் அது பலிக்காது, "தர்மமே ஜெயம்" என்பது நிச்சயமானதால் எல்லாரும் தர்மத்தை யனுசரிக்கவேண்டும். அப்பொழுது தெய்வானுக்ரகத்தால் யாதொரு குறையும் நேரிடாது. ஆதலால்தான் பகவான் பிக்ஷாடன மூர்த்தியாக அவதரித்து,—

"தர்மமே ஜெயமென்ற பிக்ஷை கேட்டேன்
தரணியிலே கலிமுற்றும் காலமாச்சு
பரணியிலே அதிஷ்டானம் கூடலாச்சு
அரணியிலே அக்னியும் தோணிறலாச்சு
ஆன்மாக்களீடேறு மார்க்கங்கேண்மின்"

என்று பற்றற்று நின்று தர்மத்தைப் பற்றி நடக்கும் வழியை மஹா பெரிய கர்மயோகமாக உபதேசித்தார்.

முடிவுரை.

இப்படியாக டியூடன்ஸ்—ஸ்லாவ்ஸ் என்கிற இருஜாதியாருடைய குணகுணங்களையும் சரித்திர பூர்வமாய் அவர்கள் பூர்வோத்திரத்தை விசாரித்து உள்ளது உள்ளபடி யுணர்ந்து உணர்த்தலானேம்.

ஆனல் ஸ்லாவஸ் என்பவர்களும் டியூடன்ஸ் என்பவர்களும் யார்? அவர்களிருவரும் நரமனுஷர்களே. நூலைப்போல் சேலையும் குணத்தைப்போல் மணமும் அமைவது இயற்கை தர்மம். இப்படி அவர்கள் நாமரூப தேசபேதங்களைத் தள்ளி முக்கியமான குணபேதங்களைக் கொண்டு பார்த்தால் இந்த மஹா பாரத யுத்தம் பூர்வம் குருக்ஷேத்திரத்தில் நடந்த யுத்தம் போலவே கர்மத்துக்கும் தர்மத்துக்கும் நேர்ந்த போராட்டமாக விருக்கிறது. கர்மத்தில் தேர்ந்தவர்கள் சண்டைக்காரர்கள் பரம்பரையி லுதித்த டியூடன்ஸ், தர்மத்தில் தேர்ந்தவர்கள் உள்ளதெல்லா மிழந்து உள்ளம் (மனச்சாக்ஷி) ஒன்றை யிழக்காமற் காப்பாற்றிய ஸ்லாவ்ஸ். இவர்கள் தர்மத்தைக்கொண்டு கர்மத்தைக் கைவிட்டார்கள். அவர்கள் கர்மத்தைக்கொண்டு தர்மத்தை கைவிட்டார்கள். "தரணியிலே கலிமுற்றுங் காலமாச்சு" ஆகையால் அவரவர்கள் போட்ட வித்து முளைத்து விளைந்து அறுவடைக்குத் தயாரா யிருக்கிறது. கண்ணுள்ளார் காணட்டும், உளக்கண்ணிலார் என்னதான் பட்டனுபவித்தாலும் காணுரே.

## NOTES AND REVIEWS.

## குறிப்பும் விமர்சனங்களும்.

### 'எம்டன் கப்பலும்' அதன் நாசமும்.

வங்காளக் குடாக்கடலில் எப்படியோ நுழைந்து தன்னிடம் அகப்பட்ட வியாபாரக் கப்பல்களை உடைத்து வியாபாரிகளுக்கு பீதியையும் சேதத்தையும் உண்டுபண்ணினதும், இரண்டு மாசங்களுக்குமுன் சென்னையில் சில குண்டுகளைப் போட்டு அறியா ஜனங்களை பயமுறுத்தியனதுமான "எம்டன்" கப்பலானது நவம்பர்மீ 10-ந்தேதி யன்று ஆஸ்திரேலியாவின் கப்பலாகிய "ஸிட்னி" என்னும் கப்பலால் கோகோஸ் அல்லது கீலிங்ஸ் என்னும் தீவுகளுக்கருகில் தாக்கப்பட்டு தீக்கிரையாக்கப்பட்டது.

'எம்டன்' கப்பலானது அத்தீவுகளில் இருக்கும் தந்திகம்பியை அறுக்கவந்ததாக தெரியவருகிறது. 'எம்டன்' கப்பலின் சேதம் விளைத்ததில் சுமார் 200 பேர்கள் மாண்டார்கள் என்றும் 30 பேர்கள் காயம் பட்டார்கள் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. 'ஸிட்னி' கப்பலின் சேதம் 3 பேர்கள் மாண்டவர்கள் 15 பேர்கள் காயம்பட்டவர்கள். 'எம்டன்' கப்பல் தலைவராகிய ! காப்டன் வான் முல்லரும், ஜர்மன் சக்கிரவர்த்தியின் மருமானுகிய ப்ரின்ஸ் ப்ரான்ஸிஸ் ஜோஸப்பும் கைதியாக பிடிக்கப்பட்டார்கள். அவர்களின் தீரத்தையும் யுத்த நீதியையும் கருதி கைதியானதும் அவர்களுடைய கத்திகளைப் பிடுங்காமல் விட்டுவைத்து அவர்களை கௌரவத்தோடு நடத்திவரத் தீர்மானித்திருக்கிருர்கள்.

### லார்ட் ராபர்ட்ஸ்.

பீல்ட் மார்ஷல் லார்ட் ராபர்ட்ஸ் அவர்கள் பிரான்ஸில் நடக்கும் யுத்தகளத்துக்கு விஜயமாகப்போன விடத்தில் குளிரினுல் மூப்புக் காரணமாக காலஞ்சென்று விட்டார்.

---

### ஆக்ஸ்பர்ட் கதை புஸ்தகங்கள்.

இவைகள் சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் புரியும்படியான நடையில் எழுதப்பட்டிருக்கின்றன. இதுவரைக்கும் மூன்று கதை புஸ்தகங்கள் வெளிவந்திருக்கின்றன. அவைகளிலிருக்கும் கதைகள் ஸ்வாரஸ்யமாயும், அதே சமயத்தில் அறிவை விருத்திசெய்வதாயு மிருக்கின்றன. இக்கதை புஸ்தங்கள், எலிமெண்டரி வகுப்புச் சிறுவர்களால் கட்டாயம் வாசிக்கப்படவேண்டும்.

இப்புஸ்தகங்களிலிருக்கும் கதைகள்:—

1. தொட்டதெல்லாம் பொன்; செண்பகவல்லி.

2. பெரும்புயல், ஸோஹுபாய், மர்லினும் விவியனும்.

3. பொன்பறவை, வானவில்லும் புதையல் பணமும்.

மேற்படி புஸ்தகங்களை பிரசுரித்தவர்கள், ஆக்ஸ்பர்ட் யூனிவர்ஸிடிபிரெஸ், சென்னையும், பம்பாயும். மேற்படி புஸ்தகங்களை நமது பார்வைக்கு அனுப்பின சென்னை, மேற்படி பிரெஸ்ஸின் மானேஜராகிய எஸ். வி. ரங்கசாமி அய்யங்கார் அவர்களுக்கு நமது வந்தனம். மேற்படி புஸ்தகங்களின் விலை ஒன்று 0—1—3 பை தான்.

### பக்திவிளக்கம்.

மேற்படி புஸ்தகம் கும்பகோணம் லோகானுகூலன் பத்திராதிபராகிய வி. எஸ். ராதாகிருஷ்ணய்ய ரவர்களால் பிரசுரிக்கப்பட்டது. இப்புஸ்தகத்தில் பக்தியினுல் மோக்ஷமடையலாம். மோக்ஷத்திற்கு பக்தியே முக்கியமென்பவைகள் நன்ருகவிளக்கி காட்டப்பட்டிருக்கின்றன. விலை அணு 12.

### தத்துவ ஞானபோதினி.

அல்லது அத்வைதமஞ்சரி. இப்புஸ்தகமும் வி. எஸ். ராதாகிருஷ்ணய்யரவர்களால் பிரசுரிக்கப்பட்டது. இப்புஸ்தகமானது பெயருக்கேற்றபடி நன்ருக எல்லாரும் அறியும்படியான வழியிலெழுதப்பட்டிருக்கிறது. விலை அணு 8.

### கர்ணன்.

இப்புஸ்தகமானது ஆர்..சுந்தரராகவ அய்யங்கார் அவர்களால் எழுதப்பட்டு வி. எஸ். ராதகிருஷ்ணய்யரவர்களால் பிரசுரிக்கப்பட்டது. இதில் கர்ணனுடைய முழு சரிதையும் எளியநடையிலெழுதப்பட்டிருக்கிறது. விலை அணு 2.

### இந்தியன் எமிகிரண்ட்.

ஆகஸ்ட் மாதத்திலிருந்து நடந்துவரும் ஒரு ஆங்கிலேய பத்திரிகை. இதனுடைய கருத்துகள்,

1. பினங்கு, சிங்கப்பூர், முதலிய அன்னிய நாடுகளுக்கு கூலிகளாகப் போகிறவர்களை கூடியமட்டும் தடுத்து புத்திமதிக் கூறுதல்.

2. படித்தவனும் தொழிலில் கைதேர்ந்த வனுமானவனை உத்ஸாகப்படுத்துதல்.

3. இந்தியாவிற்கு வெளியிலிருந்து வியாபாரமும் கைத்தொழிலும் விருத்தியாவதற்கு சாதனமான சமாசாரங்களை சேகரித்துப் பிரசுரித்தல்.

4. வெளிநாடுகளில் இருக்கும் இந்தியர்களைப்பற்றியும் அவர்களுடைய வேலைகளைப் பற்றியும் சமாசாரங்கள் பிரசுரித்தல்.

5. கூலிகளாகப் போனவர்களின் உதவிக்காக பணம் சேகரித்தல்.

6. இந்தியர்களுடைய பிரிட்டிஷ் பிரஜையின் ஸ்வதந்திரியங்களை ஆமோதித்தல்.

உள்நாடு வருஷசந்தா ரூ. 5—0—0

விலாசம்:—

தி. கே. ஸ்வாமிநாதன், பத்திராதிபர்,
இந்தியன் எமிகிரண்ட், 33. ப்ராட்வே, மதராஸ்.

எம். எஸ். ஸர்மா.

மேற்படியார் மாதந்தோறும் பிரசுரித்து வரும் சித்திர படங்களின் தீபாவளி ஸ்பெஷல் நம்பர் வரப்பெற்றோம். அதில் பகவானது எல்லா அவதாரங்களும் இருக்கின்றன. இது ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும் சிறுவர்கள் உபயோகத்திற்காக இருக்கவேண்டியது. விலாசம்:—எம். எஸ். ஸர்மா, 2. ஆபிஸ் வெங்கடாசல முதலி தெரு, திருவல்லிக்கேணி.

The "VIVEKACHINTAMANI".—The October number of this popular Tamil monthly discusses the present war from the point of view of our children's interests. It draws pointed attention to the moral aspects of war in general and to the unrestrained license indulged in by the aggressive party to the present war. "Even the most inattentive schoolboy is interested in the subject to day." It has as usual a number of other articles in connection with child-study, social study and the general education of children. The report of the Hospital Committee of the Madras Social Service League mentions the fact that "the Vivekachintamani is being appreciated by the patients in the General Hospital among whom it is circulated by the Captain of the workers there." *Hindu*, 24th October 1914.